VOL. XLVII. MARCH 1910. No. 3.

# அருணோதயம்.

# ARUNODAYAM,

THE

## TRANQUEBAR MISSION JOURNAL.

நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம்
உன்னண்டை வருகிறது. எசாயா 60, 1.

### பொருள் அட்டவணை.



EVANGELICAL LUTHERAN MISSION PRESS,
TRANQUEBAR.
1910.

## தரங்கை சுவிசேஷ பிரபலிய சங்க வரவு செலவு கணக்கு.

| | A. வரவு. | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1908-ம் ௵ டிசம்பர் ௴ கடைசியில் கையிருப்பு ... ... ... ... | 2079 | 1 | 3 | 2079 | 1 | 3 |
| 2 | சர்க்கார் பத்திர வட்டி ... ... ... | 34 | 14 | 8 | 34 | 14 | 8 |
| 3 | சேவிங்ஸ் பாங்கி வட்டி ... ... ... | 20 | 11 | 1 | 20 | 11 | 1 |
| 4 | Fiddle விற்றது ... ... ... ... | 10 | ... | ... | 10 | ... | ... |
| | உண்டியல் சேர்ப்பு. | | | | | | |
| 5 | தரங்கன்பாடி ... ... ... ... | 14 | 11 | ... | 14 | 11 | ... |
| 6 | மதுரை ... ... ... ... ... | 7 | 2 | 10 | ... | ... | ... |
| | ,, பேரையூர் ... ... ... ... | ... | 9 | ... | ... | ... | ... |
| | ,, காட்டுநேரி ... ... ... ... | ... | 1 | 3 | 7 | 13 | 1 |
| 7 | கூடலூர் சபை ... ... ... ... | 10 | ... | ... | ... | ... | ... |
| | ,, பஜனை ... ... ... ... | 4 | ... | ... | 14 | ... | ... |
| 8 | பெங்களூர் ... ... ... ... | 4 | 9 | ... | 4 | 9 | ... |
| 9 | பாண்டூர் ... ... ... ... ... | 1 | 8 | 10 | ... | ... | ... |
| | ,, சென்றுயன் பகானி ... ... | ... | 2 | 4 | ... | ... | ... |
| | ,, அவ்வூர் பள்ளிக்கூடம் ... ... | ... | 4 | ... | ... | ... | ... |
| | ,, Agriculture school மாணுக்கர் | ... | 14 | 10 | ... | ... | ... |
| | ,, P. வேதமுத்து ... ... | ... | 2 | ... | 3 | ... | ... |
| 10 | புதுக்கோட்டை ... ... ... ... | 3 | 8 | ... | 3 | 8 | ... |
| 11 | தஞ்சாவூர் ... ... ... ... ... | 7 | 10 | 6 | 7 | 10 | 6 |
| 12 | கோயம்புத்தூர் டவுண் ... ... ... | 2 | 11 | 8 | ... | ... | ... |
| | ,, ஜில்லா ... ... ... | 1 | 13 | 9 | ... | ... | ... |
| | உடுமலைப்பேட்டை ... ... ... | 1 | 5 | 3 | ... | ... | ... |
| | ,, ... ... ... ... ... | ... | 1 | 4 | 6 | ... | ... |
| | கும்பகோணம் ... ... ... ... | 5 | 5 | 11 | 5 | 5 | 11 |
| 13 | பட்டுக்கோட்டை ... ... ... ... | ... | 2 | 6 | ... | ... | ... |
| | அணைக்காடு ... ... ... ... | 1 | 7 | 1 | 1 | 9 | 7 |
| 14 | சீர்காழி ... ... ... ... ... | 18 | 4 | ... | 18 | 4 | ... |
| 15 | மணிக்கிராமம் ... ... ... ... | ... | 6 | 4 | ... | 6 | 4 |
| 16 | இரங்கூன் 1908 ... ... ... ... | 1 | 7 | ... | ... | ... | ... |
| | ,, 1909 ... ... ... ... | 4 | ... | 9 | 5 | 7 | 9 |
| 17 | நாகப்பட்டணம் ... ... ... ... | 4 | 9 | ... | 4 | 9 | ... |
| 18 | பிறையாறு ... ... ... ... | 3 | 12 | 5 | 3 | 12 | 5 |
| 19 | காரைக்கால் ... ... ... ... | ... | 8 | ... | ... | 8 | ... |
| 20 | விருதுபட்டி ... ... ... ... | 5 | 8 | 6 | 5 | 8 | 6 |
| 21 | சிதம்பரம் ... ... ... ... ... | 5 | ... | 11 | 5 | ... | 11 |
| 22 | விருத்தாச்சலம் ... ... ... ... | 14 | 6 | 4 | 14 | 6 | 4 |
| 23 | பிணங்கு ... ... ... ... ... | 7 | 3 | 10 | 7 | 3 | 10 |
| 24 | விழுப்புரம் ... ... ... ... ... | 1 | ... | 11 | ... | ... | ... |
| | ,, கீழ்மாம்பேட்டை ... ... | ... | 3 | ... | ... | ... | ... |
| | தேயோப்பிலு உப. ... ... ... | ... | 4 | ... | 1 | 7 | 11 |
| 25 | மாயவரம் ... ... ... ... ... | 3 | 3 | 6 | 3 | 3 | 6 |


# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 3. மார்ச்சு. 1910.


## 3. இயேசு கிறிஸ்து நமது பிரதான ஆசாரியர்.

"ஆனபடியினாலே தாம் இரக்கமுள்ளவரும் சனத்தின் பாவங்களை நிவிர்த்தியாக்கத் தெய்வகாரியங்களுக்கு உண்மையுள்ள பிரதான ஆசாரியருமாயிருக்கும்படி அவர் எல்லாவற்றிலும் சகோதரருக்கு ஒத்தவராக வேண்டியதாயிருந்தது" எபி. 2, 17.

நாம் பாவிகள். நமது பாவங்களுக்காக உத்தரவாதம் செய்து, நம்மைப் பராபரனோடு ஒப்புரவாக்கி, நமது ஜெபங்களையும், துதிகளையும் தமது பிதாவினிடம் கொண்டுபோய் நமக்குச் சமாதானத்தை உண்டுபண்ணி அதைக் காப்பாற்றக்கூடிய ஆசாரியர் ஒருவர் நமக்குத்தேவை. இயேசுகிறிஸ்து ஒருவரே இப்படிப்பட்ட ஆசாரியர்.

அவர் நமது பாவங்களுக்காகத் தம்மைத்தாமே பலியாய் ஒப்புக்கொடுத்து உத்தரவாதம் பண்ணினார். அவர் நியாயப்பிரமாணத்துக்கும் தேவ நீதிக்கும் திருப்தி செய்து, தமக்கு மகிமையும் நமக்கு ஆறுதலுமாக நாம் பராபரனண்டை திரும்பி வரும் வழியை நமக்குத் திறந்து தமது மரணத்தால் நம்மைப் பராபரனோடு ஒப்புரவாக்கினார்.

இப்போது பராபரன் இயேசுவின் நாமத்தில் தம்மண்டை வருகிற மிகப்பெரிய பாவிக்கும் மன்னிப்பருள்வதில் நீதியுள்ளவராய் விளங்குகிறார்.

நமது இரட்சகர் தமது பிதாவின் சிம்மாசனத்தின்முன் நிற்கிறார். அவர் தமது மார்பிலே நமது நாமங்களைத் தரித்துக்கொண்டும் தமது கரத்திலே சிறந்த தூபகலசத்தை வைத்துக்கொண்டுமிருக்கிறார். அந்தத் தூபகலசத்தில் நீசப்பாவிகளாகிய

நமது ஜெபங்களும், துதிகளும் ஊழியங்களுமிருக்கின்றன. இவை நமது பிரதான ஆசாரியரது புண்ணியத்தால் சுத்திகரிப்ப டைந்து பரிமளிக்கும்.

தாம் சிலுவையில் சிந்தின திருக்குருதியால் நமக்குச் சமாதானம் உண்டுபண்ணினூர். தமது ஓயாத பரிந்து பேசுதலால் இச்சமாதானத்தைக் காப்பாற்றிக்கொண்டு வருகி ரூர். அவர் இரக்கமுள்ளவராதலால், நமது தவறுதல்களிலும், பெலவீனங்களிலும் சோதனைகளிலும் துயரங்களிலும் நமக்கா கப் பரிதாபப்படுகிறூர். அவர் உண்மையுள்ளவராதலால், தமது உடன்படிக்கையைக்காத்து, தமது ஆசாரிய உத்தியோகத்தை அதிமேன்மையாய் நடத்தித் தமது வாக்குத்தத்தங்களை நிறைவே ற்றித் தமது திரு இரத்தத்தின்பேரில் விசுவாசம் வைக்கும் யா வரையும் இப்போதே ஏற்றுக்கொண்டு அவர்கள் நித்திய இரட் சிப்படையச் செய்கிறூர்.

இனி இரத்தம் சிந்துதல் அவசியமில்லை. இயேசுகிறிஸ்து வை விசுவாசிக்கும் பாவியின்மீது இனித்தேவதண்டனை விதி க்கப்படுகிறதுமில்லை. அவன் அதற்குமாருக, தேவ அன்பு உள் ளத்தை ஆளும் பாக்கியத்தை இவ்வுலகிலேயே உணர்ந்து, மோ ட்சத்தின் முன் ருசியை அனுபவிக்கிறுன்.

ஆத்துமாவே! இயேசுகிறிஸ்துவே உன் ஒன்றுன பிரதா ன ஆசாரியர். அவர் மெல்கிசேதேக்கை ஒத்த சமாதானத்தின் ராசா, நீதியின் ராசா. அவர் செலுத்திய பலி ஒன்றே உனக்கு இரட்சிப்பைச் சம்பாதித்த மெய்ப்பலி. அவர் ஒருவரையே உன் அருமை ஆசாரியராக ஒப்புக்கொள்ளு.

"நம்முடைய பலவீனங்களுக்குப் பரிதபிக்கமாட்டாத பிரதான ஆசாரியர் நமக்கு இராமல், பாவந்தவிர எல்லாவற்றி லும் நம்மைப்போல் சோதிக்கப்பட்டவர் நமக்கு இருக்கிறூர்." எபி. 4, 15.

"நீர் என்றைக்கும் நான் வாஞ்சையாய்ப் பணிந்துகொ ள்ளும் பத்தா; நீர் என் ஆசாரியருமாய்ப் பலிபோல் மாண்ட கர்த்தா".

C. I. S.

## 44 - வது குருமார் கூட்டம்.

கூட்ட ஒழுங்கில் கண்டபடி 1910-ம் ஹூ ஜனுவரி மீ 15-ம் உ சனிக்கிழமை பிற்பகல் 4 மணிக்குப் புது எருசலேம் கோவிலில் குருமாருக்கும் சபையாருக்கும் பாவசங்கீர்த்தன



ஆராதனை வைக்கப்பட்டது. சங். புளும்ஸ்திராண்டு ஐயர் 2 கொரி. 5, 14. 15 ஐ ஆதாரமாக்கி, மெய்த்தவசுக்கேவினர்.

16 உ ஞாயிறு காலை ஆராதனை வழக்கம்போல் 8 மணிக்கு ஆரம்பிக்க, சங். தி. முத்தியப்பன் ஐயர் அந்நாளின் புதிய சுவி சேஷ வாக்கியத்தின்பேரில் (யோவா. 1, 43-51) பிரசங்கித்தார். பிரசங்கித்தபின் சபையாரும் குருமாரும் பரிசுத்த இராப்போ சனத்தில் பங்கு பெற்றூர்கள். பிற்பகல் 4 மணிக்கு நடந்த கர் மானிய ஆராதனையில் சங். M. எல்வைன் ஐயர் கொலோசி. 4, 2 இன் பேரில் கர்மானிய பாஷையில் பிரசங்கித்தார்.

17 உ திங்கட்கிழமை ஒன்பது மணிக்கு ஐரோப்பிய சுதேச குருமாரனைவரும் எருசலேம் ஆலயத்தில் வந்து சேர, 264-ம் ஞானப்பாட்டின் முதல் இரண்டு கவிகளைப் பாடியபின், சங். கெத்சிங் ஐயர் 46-ம் சங்கீதத்தைச் சவிஸ்தாரமாய் விஸ்தரி க்கக் கூட்டம் ஆரம்பித்தது.

கூட்டத்தலைவர் கூடியிருக்கும் இத்தமிழ்க் கூட்டத்தா ருக்கு மகா கனம் கொலேகியுஞ் சங்கத்தார் கொடுத்திருக்கும் புதிய சலாக்கியங்களைத் தெரிவித்தபின், கூட்டத்தின் முதல் நாள் நடபடிகளை எழுதுவதற்கு சங். G. தாவீது, சங். இராசேந்திரம் என்ற ஐயர்மாரும், இரண்டாம் நாள் நடபடிகளை எழுதுவதற்கு சங். S. முத்துசாமி, சங். M. யோசேப்பு என்ற ஐயர்மாருந் தெ ரிந்துகொள்ளப்பட்டார்கள். அப்பால் சங். கு. சாமுவேல் ஐயர் பாவத்தின் காரணத்தைப் பற்றிய இந்துக்களின் கொள்கையை யும் அதற்கெதிர் நியாயங்களையும் காட்டுமோர் பிரபந்தத்தை வாசித்தார். வாசித்தபின் அதைப்பற்றிச் சம்பாஷணை நடந்தது.

பிறகு சங். பவுல் அருளப்ப ஐயர் பாலர் தேவாராதனைக் கமிற்றியார் செய்த வேலையைப்பற்றிய ஒரு சுருக்க ரிப்போர்ட் டை வாசித்தார். அதன்பேரில் நடந்த சம்பாஷணையில் பாலர் தேவாராதனை நமது மிசியோன் சேகரங்கள் எங்கும் தத்தமக் குத் தோன்றியபடி வைத்து நடத்தலாம் என்கிற முடிவுக்கு வந் தார்கள்.

அப்பால் கூட்டத்து அழைப்பு நிருபத்தின் முதல் பக்கத்திலுள்ள விஷயங்களைக்குறித்துப் பேசப்பட்டது. இத் தோடு முதல் நாள் வேலை முடிய, சங். ஜே. தாவீது ஐயர் ஜெபிக் கக் கூட்டம் முடிந்தது.

18-ம் உ காலை ஒன்பதுமணிக்கு 186-ம் பிரார்த்தனை மு தல் மூன்று கவிகளைப் பாடியபின், சங். ஞா. சாமுவேல் ஐயர் பிலி. 2, 1-11 ஐ வாசித்து ஜெபிக்கக் கூட்டம் ஆரம்பித்தது. அடுத்த வருஷமுதல் கூட்டத்தின் இரண்டாம் நாளாகிய செவ் வாய்க்கிழமை முழுவதையும் கூட்டவேலைக்கென்றே உபயோகிக்

கும்படி வழக்கமாய்ச் செவ்வாய்ப் பிற்பகலில் நடந்து வந்த மிசியோன் பண்டிகை ஆராதனையை எப்போது வைப்பதென்று யோசித்ததில், ஞாயிற்றுக்கிழமை காலை ஆராதனையையே மிசியோன் பண்டிகை ஆராதனையாக்குகிறதென்றும், மிசியோன் வேலையைப்பற்றிய ரிப்போர்ட்டை ஞாயிறு சாயந்தரம் செமிநேரியில் வாசிப்பதென்றுந் தீர்மானிக்கப்பட்டது.

பிறகு சங். வே. தெய்வசகாயம் ஐயர் கைத்தொழிலைப் பற்றிய ஓர் பிரபந்தத்தை வாசித்ததின் பலனைக் கூடிய சீக்கிரம் கைத்தொழிலை நமது மிசியோனில் முன்னுக்குக்கொண்டுவருவதற்கான வழிவகைகளை ஆலோசித்து அறிவிக்கும்படி சங். R. ஷொமேருஸ், சங். பவர், கனம் சூல்ஸ்துரை, சங். வே. தெய்வசகாயம், சங். பவுல் அருளப்பன் என்பவர்கள் அடங்கிய ஒரு கமிற்றி கூட்டத்தாரால் நியமிக்கப்பட்டது.

பிறகு நமது Literary Commitee தலைவர் சங். சேமே ஐயர் கடந்த வருஷத்தில் ஷை கமிற்றியார் செய்த வேலையைப் பற்றிய விபரமான ரிப்போர்ட்டை வாசித்தபின், அதைப்பற்றிச் சம்பாஷணை நடந்தது.

அப்பால் சங். ஞா. தெய்வசகாயம் ஐயர் நமது பாடசாலைகளில் படித்த புறமதஸ்தரான பிள்ளைகளிடம் வேதபாடங்களால் உண்டான நற்பலன்களை அவர்கள் பாடசாலைகளை விட்டபின்னும் இழந்துபோகாதபடி நாம் செய்யவேண்டியதென்னவென்பதைப்பற்றிய ஓர் உபந்நியாசத்தை வாசித்தார். இப்பிரபந்தத்தை அருணோதயத்தில் பிரசுரிக்கும்படியாகக் கூட்டத்தார் கேட்டுக்கொண்டார்கள். 362-ம் ஞானப்பாட்டைப் பாடினபின், சங். ஞா. தெய்வசகாயம் ஐயர் ஜெபிக்கக் கூட்டம் முடிவு பெற்றது.

பிற்பகல் 4 மணிக்குப் பண்டிகை அலங்காரம் பெற்ற எருசலேம் ஆலயத்தில் மிசியோன் பண்டிகை ஆராதனை ஆரம்பித்தது. அதில் சங். E. தெய்வசகாயம் ஐயர் எசா. 45, 22. 23 இன்பேரில் பிரசங்கிக்க, சங். யாக்கோபு ஐயர் மிசியோன் கிரியையைப்பற்றிய ரிப்போர்ட்டைச் சொன்னார்கள்.

சாயந்தரம் 7 மணிக்கு மறுபடியும் சபையார் ஆலயத்தில் கூடிவந்தபோது, சங். பேல்பெர்க், சங். J. சாந்தகிரின், சங். ஜே. தாவீது ஐயர்மார்கள் மிசியோன் கிரியையில் தாங்கள் அடைந்த அனுபவத்தைச் சொன்னார்கள்.

மறுநாள் புதன்கிழமை முதல் சனிக்கிழமை மட்டும் ஐரோப்பிய குருமார்களின் கூட்டம் நடந்தேறிற்று. 22-ம் உ சனிக்கிழமை மாலை 7 மணிக்கு எருசலேம் ஆலயத்தில் வாத்திய சங்கீத காலக்ஷேபம் நடந்தபோது, தஞ்சை ஜில்லா கலெக்டர் துரையவர்களும் வந்திருந்து அதில் பங்கு பெற்றார்கள்.



கூட்டகாலத்தில் சுதேச குருமாருக்கென்றேற்பட்டிருந்த வசதியில் 15, 16, 17, 19-ம் உ இரவுகளில் முறையே சங். ஞா. தெய்வசகாயம், சங். R. பிரேலிக், சங். ஜான்சன், சங். பேல்பெர்க் ஐயர்மாரால் வெகு எழுப்புதலான தியானக் கூட்டங்கள் நடந்தேறின.

கர்த்தர், இக்கூட்டங்களால் நமது மிசியோனுக்கும் அதின் எல்லா ஊழியருக்கும் ஆசீர்வாதம்வர, அருள்புரிவாராக.

---

## நமது பள்ளிக்கூடங்களை விட்ட புறமதப் பிள்ளைகளுக்கு நாம் செய்யத்தக்க தென்ன? (*

சிறு பிராயமுதற்கொண்டு இத்தேசத்தில் பிள்ளைகள் தங்கள் தங்கள் சமயக்கதைகளைத் தாய்மார் பாட்டிமாரிடத்தில் கற்றுக்கொண்டு வீட்டுத் தெய்வத்துக்குத் திருமஞ்சனமாட்டி புஷ்பம், தீபம், தூபம் முதலியவற்றால் உபாசிக்கக் கற்றுக் கொள்ளுகிறார்கள். ஒவ்வொரு உயர்குலத்தார் வீட்டிலும் இப்படி நடக்கும். வீட்டுத் தெய்வத்தின் ஆராதனையை வைராக்கியமாய்க் காப்பாற்றுகிறவர்கள் பாட்டிமாரும் தாய்மாருந்தான்.

பஞ்சமர் முதலிய கீழ்ச்சாதியாரும கிராமவாசிகளும் பெரும்பாலும் பேய் வணக்கக்காரர். ஐயனார், பிடாரி, காளி இப்பேர்ப்பட்ட துஷ்டதேவதைகளுக்குக் கட்டப்பட்ட கோவில்களையும், விக்கிரகங்களையும், குதிரை, யானை முதலிய குயவன் கைவேலைகளையும் கிராமங்களில் காணலாம். துர்ஆவிகளைப் பற்றிப் பற்பல பயங்கர கதைகளைச் சொல்லி அவைகளைச் சாந்தப்படுத்துவதற்கு ஆடு, கோழி அறுத்து, கள் சாராயத்துடன் படைக்கவேண்டுமென்று ஜனங்களை மிரட்டி, சமயம் போல ஆவேசங்கொண்டு ஜனங்களைப் பயமுறுத்திக் காசுபறிக்கத் தெரிந்த பூசாரிகள் இவ்வகை ஆராதனைகளை வைராக்கியமாய்க் காப்பாற்றுவார்கள்.

நாகரீகமுள்ள பட்டணங்களிலும் அதில்லாத பட்டிக்காடுகளிலும் நாம் கிறிஸ்தவ பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி, கிறிஸ்து இயேசுவுக்குள் தேவன் வெளிப்படுத்தியிருக்கிற இரட்சிக்கிற சத்தியங்களை உபதேசிக்கிறோம். நம்வேலை எளிதல்ல. உரமான அஸ்திவாரமுள்ள பிசாசின் கோட்டையை ஒரு கையால் இடித்துக்கொண்டு மறு கையால் கிறிஸ்து இயேசு வாசஞ்செய்கிற தெய்வாலயத்தை நாம் சிறுவர் உள்ளங்களில் கட்ட

---

*) இந்த வியாசம் குருக்களின் 41ம் சினோட் கூட்டத்தில் சங். ஞா. தேவசகாயம் ஐயரால் படிக்கப்பட்டது.

வேண்டும். இதற்குக் கிறிஸ்து நிறைவாகரமாய் வாசஞ் செய்யப்
பெற்ற ஆட்கள் அவசியம்.
பழைய புதிய ஏற்பாட்டுச் சரித்திரங்களும் ஞானுபே
தேசம், பிரார்த்தனை முதலிய ஞானநூல்களும், கிறிஸ்து இயேசு
வை நடுநாயகமாய் நோக்கிப்பார்க்கும். கிறிஸ்துவோ பராபரனு
டைய பிதா உள்ளத்தை நடுநாயகமாய் நோக்கிப் பார்க்கிருர்.
பத்துக்கற்பனைகள் ஒருபக்கத்தில் நமதுள்ளத்தையும் மறுபக்கத்
தில் பராபரனுடைய உள்ளத்தையும் சிங்கநோக்காய்ப் பார்க்கும்.
நம்முள்ளம் பராபரனுடைய உள்ளத்துக்குப் பொருந்தாத கேடு
பாடுகள் நிறைந்ததாதலால், நாமும் அவரும் ஒரே ஜீவஐக்கியத்தி
லிருக்கமுடியாது. இதைப் பத்துக்கற்பனைகள் நமக்குணர்த்தி
அந்தச் சீர்கேட்டை நிவர்த்திக்க வல்லவராகிய கிறிஸ்துவை
அண்டிக்கொள்ள நம்மைத் தூண்டும். ஆகவே நம் கல்விச்சாலை
களில் சத்தியவேத பாடங்களைக் கற்பிக்கிற முறை கிறிஸ்துவை
யே நடுநாயகமாய்க் காட்டுகிற முறையாயிருக்கவேண்டும்.
கர்மானியா, அமெரிக்கா தேசங்களில் கிறிஸ்தவ பாலிய
பாலிகைகளுக்குப் படிப்படியாய் விசாரிக்கிற வட்டமுறை (con-
centric method) யை அநுசரித்து வேதபாடங்களும் மற்றப்
பாடங்களும் கொடுக்கப்படும். இதுவே பாடங்கொடுப்பதற்கு
ச் சிறந்த முறை என்பதை யாரும் மறுக்கமாட்டோம். இந்த
முறையை அனுசரித்தே நம கனம் ரைகார்ட், எல்வைன் ஐயர்
மார் வேதசரித்திரங்களைச் சிறுவருக்காக இயற்றியிருக்கிருர்கள்.
அதனேடு கிறிஸ்துவை நடுநாயகமாய்ப் பார்க்கிற முறையும்
(Christo - centric method) அநுசரிக்கப் பட்டாலொழியப்
புறமதப்பிள்ளைகளுக்கு நாம் போதிக்கிற வேதபாடங்கள் இரட்
சிக்கிற தேவபலமாய்ப் பலிக்க மாட்டாவென்பது பிரத்தியட்சம்.
கிறிஸ்தவ பிள்ளைகளுக்குக்கூடக் கிறிஸ்துவை நடுப்
புள்ளியாய்க் காட்டுகிறமுறையே ஞானுபதேசத்தைப் போதிக்
கிறதற்கு ஏற்றமுறையாகும். திடப்படுத்தலுக்குப் போதிக்கப்
படும் பிள்ளைகளுக்குப் பவாரியா தேசத்தில் இந்த முறையை
ஒட்டி முந்தி விசுவாசப் பிரமாணமும், அதன்பிறகு பத்துக்கற்ப
னைகளும் வேறு ஆதிநியாயங்களும், கற்பிக்கப்படுகிறதென்று க
னம் பவர் ஐயர் உணர்த்த உணர்ந்தேன், அதன்பிறகு கனம் புரு
ட்சர் ஐயரும் தந்தேசத்தில் அதுவே சிறந்த முறையென்று எ
னக்குவிளக்கி, அந்தமுறையை அநுசரித்த ஒரு ஞானுபதேச
விஸ்தரிப்பு நூலையுங் காட்டினர். கனம் பவர் ஐயர் சொன்ன நா
ள்முதல் இந்த முறையைக் கடைப்பிடித்து, திடப்படுத்தல் பிள்
ளைகளுக்குப் போதிப்பதில் நல்ல பலனைக்கண்டேன்.
இனி, பள்ளிக்கூடங்களில் வேதபாடங் கற்கிற புறமதப்
பிள்ளைகளை எவ்வாறு கூட்டி அவர்கள் அடைந்திருக்கிற வேத



அறிவு மங்காமல் காக்கலாம் என்கிற கேள்வியை விசாரணை
செய்யவேண்டும். பள்ளிக்கூடங்களோடு எவ்வித சம்பந்தமுமில்
லாதவனும், புறமதப் பள்ளிப் பிள்ளைகள்மேல் நேரான செல்வாக்
கில்லாதவனும், சுயஅநுபவத்தால் கண்ட யுக்திகள் தெரியாதவ
னுமாகிய என்னுல் இந்த விசாரணை செய்வதற்கு இயன்றதல்ல.
ஆகிலும் மேலானவர்கள் இந்தக் கூட்டத்தில் இந்த விஷயத்தை
எனக்குக் குறித்தபடியால் அவர்களுடைய கட்டளைக்கு அடங்கி
அதைப்பற்றிச் சொல்லத் துணிந்தேன். ஆதலால் அனுபவங்
கண்டவனல்ல, ஆரம்பக்காரனுய் நான் எனக்கு எப்படி பரீட்
சார்த்தமாய் யுக்தி செய்துகொள்வேனே அப்படி மாத்திரம்
நான் அதைச் சொல்லலாகும்.
நகரங்களிலுள்ள பள்ளிப்பிள்ளைகளையும் கிராமங்களிலு
ள்ள பள்ளிப் பிள்ளைகளையும் ஒருசேரக் கவர்கின்றவை படமும்
பாட்டுமாகும். நல்லபடங்களும் செம்மையான பாட்டுகளும் அவ
சியம். அதற்கு வழிசெய்துகொண்டு வாரத்தில் ஒருமுறையாவது
(சனிஇரவு) பிள்ளைகளை உற்சாகப்படுத்திக் குறித்த இடத்தில்
கூட்டி, ஒருமணிநேரமாகிலும் படத்தினுலும் பாட்டினுலும் வேத
சரித்திரங்களை விளக்கலாம். புறமதஸ்தர்கள் தம்வீடுகளில் தம்
பிள்ளைகளுக்கு நம்வேதபாடங்களைச் சொல்ல இடங்கொடார்கள்.
ஆதலால் நாம் குறித்தஇடங்களில் அப்பிள்ளைகளை வருவித்துக்
கொள்ள வேண்டும். ஒவ்வொரு படத்தையும் விளக்கும்போது
சொன்ன சரித்திரம் மனதில் பதியும்படி சிறுவருக்குரிய எளியபா
ஷையில் இரண்டடிக்கு அதிகப்படாத சிறுசெய்யுள்களில் அதை
அடக்கி மனப்பாடஞ் செய்யப்பண்ணுதல் நலம்.
ஒளிச்சித்திரப்படங்கள் சிறியோரையும் பெரியோரையும்
இழுக்கும். ஆனுல் அவை சொற்ப வரும்படிக்காரருக்குச் சக்திக்
கு மிஞ்சினவை. கையிலுண்டானவர்கள் அவ்வகை உபகரணங்
களை வைத்திருந்தால் விசாரித்துப் பார்த்துக் குறித்தவிடத்தில்
அவர்களைத் தயவாய் வரும்படிகேட்டு சிறியோரையும் பெரியோ
ரையுமழைத்து அவர்களுக்கு அப்படங்களைக் காட்டுவிக்கச்
செய்யலாம்.
ஞானுபதேசம் வேதசரித்திரத்துடன் இணைபிரியாத்தோ
ழனயிருப்பதவசியம். வேதசரித்திர சம்பந்தமாய் ஞானுபதேச
த்தையுமொட்டிச் சொல்ல முந்தியே சாவதானமாய் யோசித்துக்
கொள்ளவேண்டும். அதற்குச் சமயமில்லாவிட்டால் வெறுஞ்சரி
த்திரத்துடன் விட்டுவிடுவதே நலம். ஞானுபதேசத்தின் ஒருவிஷ
யத்தை முக்கிய பொருளாய் வைத்து அதைவிளக்குகிற வேதசரித்
திரங்களையும் கிறிஸ்தவ சரித்திரங்களையும் இனியபடங்களுடன்
சொன்னுல் பிள்ளைகளுடைய மனதில் பசும் மரத்தாணிபோல் பதி
யும், சரித்திரங்களை எடுத்த விஷயப்பொருளோடு சம்பந்தப்படுத்

தி, உயிர்ப்பாய்ப்பேசி, கேட்போர் மனதை வசியப்படுத்திக்கொள்
வது எளிதில் வராது. அதினிமித்தம் இவ்வாறுபேச நியமித்துக்
கொள்ளும்போதெல்லாம் சங்கிலித் தொடராய்ப் பெரிய விஷயங்
களும் சிறியவிஷயங்களும் தொடுத்து வரவேண்டும். சிறுவிஷயங்
கள் மிதமிஞ்சிக் குறுக்கிட்டுச் சொன்ன பாடத்தின் முழு ரூபத்
தை மறைக்காதபடி சாவதானமாயிருக்கவேண்டும்.
நகரப் பள்ளிக்கூடங்களில் உயர்ந்த வகுப்புப் பிள்ளைகளுக்
குப் படங்கள் மனதையிழுக்கப் போதுமானவையல்ல. அவர்கள்
வேடிக்கைமேலல்ல அறிவின்மேல் ஆசைவைத்தவர்கள். அந்த
ஆசை வழியாய் அவர்களை இழுக்கவேண்டும். அறிவுநூல் துறை
கள் எல்லாம் ஒருவனுக்கே அகப்படாவென்பதுண்மையாயினும்,
அவற்றுள் ஒரு துறையாயினும் ஒருவனுக்கு அகப்படக்கூடும்.
அந்தத் துறையறிவைக் கேட்கக் கேட்க நுனியிற் கரும்பு தின்ற
வாறு புத்திக்கு இனிமை ஊட்டத் தக்கவிதமாய்ச் சொல்லப்பழகு
வது அழகு. ஒருவன் சொல்லப்புகுந்த உலகியலுண்மைகளை ஒட்
டித் திருவேத உண்மைகளைச் சொல்லலாம். இது பார்வைக் கெ
ளிதாய்த் தோன்றினும் வாஸ்தவத்தில் மகா கடின முறையே.
சகல அறிவு களஞ்சியமாகிய நமது ஆண்டவர் அறிவில்லாப் பாம
ரர்களுக்கு இந்த முறையால்தான் பரம ஞானத்தை உணர்த்தி
ஞர். கருத்தழுந்துந்தோறும் ஆழம் எட்டாமல் பரந்து விசாலிக்
கிற அவருடைய உவமைகள் இதை நன்குவிளக்கும். Drummond
ஆசிரியர் உ ல கி ய ல் வி தி க ளே ஞ ா ன உ ல கு க் கு ம ா
கும் (Natural law in the spiritual world) என்றொரு நூல்
எழுதினர். அது ஒரு காட்டுநூல் (a sample work) மாத்திரமே.
அந்தக் காட்டை மாதிரியாகப் பிடித்துத் திருவேத இரகசியங்க
ளைப் பிறருக்குப் புகட்டப் பழகவேண்டும். திருஷ்டாந்தமாக,
பி ற வு யி ர ா ல் த ம் மு யி ர் வ ள ர் ப் ப வை (Parasites) என்
னும் அதிகாரத்தில் பாவம் நம் தேவவுயிரைக் கொன்று பிழை
க்கும் நரகப்பூண்டு போன்றது என்பதை அவ்வாசிரியர் இனிது
விளக்குகின்ருர். இந்த முறைக்குத் தாதுவர்க்கம், தாபரவர்க்கம்,
ஜீவவர்க்க முதலிய வர்க்க நுட்பங்களை ஐயந்திரிபற அறிந்திருக்
கையும், அந்தந்த வர்க்க நுட்பங்களை உணர்த்தும் படங்களும்,
விளக்கத்தகுந்த கருவிகளும் (திருஷ்டாந்தமாக Prism, Micros-
cope etc.) அவசியமாகும். ஒருவனுக்குச் சுயமே தெரியாத விஷ
யங்களைத் தெரிந்த வேறு பேரைக்கொண்டு விளக்குவித்து, பரம
சத்தியங்களை அவற்றை வாயிலாய்க் கொண்டு சொல்லலாகும்.
இவ்வாறு சொல்வதில் இன்னொரு லாபமும் உண்டு. இந்துமார்க்
கம் உலகியலுக்கும் ஞானவியலுக்கும் சிறிதும் பொருத்தமில்லா
த ஆபாசம் என்று கேட்போர் மனதில் பதியப் பண்ணுவதற்கு
இது வல்லமையுள்ள கருவியாகும். மேலும் இன்னொன்றுங்



கவனிக்கத்தக்கது. குறித்த இடத்தில் வாலிபர் வழக்கமாய் விரு
ப்பத்துடன் வந்து கூடுவதற்கு டேனிஷ் மிசியோன்காரர் செய்
வதுபோல் ஒரு பொது வாசிப்புச்சாலையும், அச்சாலையில் சிறந்த
சிலபத்திரிகைகளும், ஞானஅறிவு ஊட்டுகிற புஸ்தகச்சேர்ப்பும்,
தினசரிவிளக்கும் இருக்கச் செய்துகொள்வது ஞானமானயுக்தி
யாகும்.

கிராமப் பிள்ளைகளுக்கு என்ன செய்யலாமென்பது எனக்
குத் தீர்க்கமாய் விளங்கவில்லை. ஆயினும் ஒன்றுதெரியும். கிராமத்
தார் பெரியோரும் சிறியோரும் வேலையொழிவு கிடைத்தால்
இராநேரங்களில் பாரதம், இராமாயணம் முதலிய இதிகாசக்
கதைகளைக் கேட்பதற்குப் பிரியமாய்க் கூடுவார்கள். நல்ல சந்த
மாய்ப் படிக்கத் தெரிந்தவனுக்குச் சம்பளங் கொடுத்துப் படிக்
கச் சொல்லிக் கேட்பார்கள். கேட்கும்போது ஏதேனும் ஒரு பட
த்தை அலங்கரித்து வைத்துக்கொண்டு கேட்பார்கள். இந்தப் பிரி
யத்தைக் கைப்பிடியாய்க் கொண்டு திருச்சரித்திரங்களைச் சிறந்த
படங்களுடன் நாமேன் கிராமங்களில் சொல்லக்கூடாது. நமது
கிராமப்பாடசாலைகளில் தேறின பிள்ளைகளை எடுத்து அவர்களுக்
குத் திருச்சரித்திரங்களை மனப்பாடஞ் செய்வித்துச் சந்தமாய்ச்
சொல்லவும் பழக்கலாம். நம் பள்ளிக்கூடங்களில் படித்த பிள்ளை
கள் தம்தம் கிராமங்களில் பெரியோருக்கும் சிறியோருக்கும்
பிரியம் உண்டாக்கத்தக்க விதமாய் இப்படி வேலைசெய்ய உற்சாக
மாய் வருவார்கள்.

பிள்ளைகள் திருச்சரித்திரஞ் சொல்லிமுடிக்குந்தோறும்
கிராம மிசியோனூழியர் இரட்சிக்கிற உண்மைகளையும் திறமை
யாய் விளக்க ஏதுவிருக்கும்.

என்னலியன்ற வரையில் இவ்விஷயத்தை ஒருவாறு
சொன்னேனாகினும் அதைச் சவிஸ்தாரமாய்ச் சொல்ல வல்லவர்
களாகிய கர்மானிய சுவேதீஷ் ஐயர்மார் பூர்த்தியாய் விளக்குவா
ர்களென்று நம்பி இத்துடன் நிறுத்துகிறேன். N. D.

---

## மிசியோன் சமாச்சாரங்கள்.

**சென்னை இராயபுரம் விடிவெள்ளி ஆலயச் சேர்ப்பின் பண்டிகை.**

இராயபுரம் விடிவெள்ளி ஆலயம் ஸ்தாபகமான 28 வரு
ஷங்களுக்குக் கடந்த வருஷம் டிசம்பர் மீ 12-ம் உ ஷை பண்டி
கையை முதல் விசையாகக் கொண்டாட ஷை சபையின் குரு
கனம் முத்துசாமி ஐயரவர்கள் முகாமைச் சங்கத்தாரை ஏவ,
முகாமைச் சங்கத்தார் இது விஷயத்தைப்பற்றிக் கடந்த ஆகஸ்டு
மீ 28ம் உ கூடிய சபைக்கூட்டத்தில் சபையாரின் அபிப்பிராய

த்தைக் கேட்கச் சபையார் யாவரும் ஏகமனதாய் ஒப்புக்கொ
ண்டு, ஒவ்வொருவரும் உற்சாகமாயும் சந்தோஷமாயும் உன்னத
மான காணிக்கைப் பொருட்களைக்கொண்டு வந்து சபை குரு
வசம் நாளடவில் ஒப்புவித்தார்கள். டிசம்பர் மீ 12-ம்உ ஞாயிற்
றுக் கிழமை மாலை 3 மணிக்கு இந்தப் பண்டிகைக் கொண்டாட்
டம் துவக்க ஏற்கனவே குறிக்கப்பட்டிருந்தது. இதற்கு முன்ன
தாக கனம். வட்டசீனியர் ஞா. தேவசகாயம் ஐயரவர்கள் B. A.
மேற்படி பண்டிகைக்கென்று கனம். புரூட்ஸர் ஐயரவர்களையும்
கனம். அம்மாளவர்களையும் வரவழைத்திருந்தார்கள். சபையார்,
இனத்தார் இஷ்டர் முதலியவர்களை அழைத்து வந்திருந்தார்கள்.
குறிக்கப்பட்ட தினத்தின் மாலையில் கோவில் மணி அடிபட,
கனம். ஐயர்மாரும் சபையாரும் இஷ்டரும் கோவிலில் புகுந்து
ஒழுங்காயும் அமைதலாயும் ஆசனங்களில் அமர்ந்தார்கள். சபை
யார் பண்டிகைக்குச் சம்பந்தமான ஞானப்பாட்டுகளில் சில கவிக
ளைப் பாட, கனம். முத்துசாமி ஐயரவர்கள் ஷை பண்டிகைத் தினத்
துக்காகக் குறிக்கப்பட்ட 2 கொரி. 9, 6-15 வசனத்தை வாசித்து
ஸ்தோத்திர ஆராதனை செய்தபின், எல்லோரும் ஏகமாய் எழுந்து
கோவிலின் வாசல் வந்து அமைதலாய் பாங்குகளில் உட்கார்ந்தார்
கள். கோவில் வாசலுக்கெதிரில் இருக்கும் கனம். R. ஆந்துமன்
ஐயர் பவுண்டனைச் சுற்றிச் சபையார் கொடுத்த சாமான்கள் கிர
மப்படுத்தி வைக்கப்பட்டிருந்தது. கனம். வட்ட சீனியரவர்களின்
கேட்டுக்கொள்ளுதலின்படி கனம். E. புரூட்ஸர் ஐயரவர்கள் அக்
கிராசனாதிபதியாயிருந்து முகவுரையாகப் பண்டிகையைக் குறித்
துப் பேசிச் சாமான்களை ஏலம்போடக் கேட்டுக் கொண்டதின்
பேரில், மகா-ா-ா I. D. தங்கஸாமி பிள்ளையும், மகா-ா-ா J. D.
ராஜு பிள்ளையும் ஏலம் கூறுகிறவர்களாக ஏற்பட, மகா-ா-ா I.
B. யோசேப்பு பிள்ளை ஏலம் எடுப்போரின் ஜாப்தாவை எழுத
ஒப்புக்கொண்டார். மூப்பனர் மகா-ா-ா R. V. முத்திய பிள்ளை
ஷை பண்டிகைக்கென்று கரிசனமாய்க் கவலைப்பட்டுச் சேகரித்து
வந்த 30 ரூ நோட்டைக் கனம். நாட்டையரவர்களுக்குக் கொடுக்க
அவர்கள் அதை அக்கிராசனாதிபதிக்கு ஒப்புவித்தார்கள். அக்கி
ராசனாதிபதி அத்தொகையைப்பற்றிப் புகழ்ந்துபேசித் தொகை
யைக் கொடுத்தவர்களுக்கும் அதைக்கொடுக்க ஏவினவர்களுக்
கும் வந்தனமளித்தார்கள். பிறகு சாமான்கள் எல்லாம் ஏலம்
கூறப்பட்டுப் பண்டிகைக்கென்று உயர்ந்த விலைக்கு எடுக்கப்பட்
டது.

இப்பண்டிகைக் கென்று செலவிட மகா-ா-ா P. ஆரோக்
கியசாமி பிள்ளையும், மகா-ா-ா T. ஆபிரகாம் ஐயாத்துரை பிள்ளை
யும் Doctor Haller துரையைக் கேட்டு இனமாகப்பெற்ற 8 ட
சன் Aerated waters களை ஷை கம்பவுண்டின் வேறோர் இடத்



தில் வைத்துவிற்க, அதையும் மேலான விலைக்கு வேண்டியவர்கள்
வாங்கிப் பருகினார்கள். இதனால் வந்தபணவரவையும் ஷை பண்டி
கைக்கென்று கொடுத்தார்கள்.

| இப்பண்டிகையில் வந்தவரவு. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| இந்துநாணயச்சீட்டு ரொக்கப்பணம் | 36 | 1 | 0 |
| சோடாவிற்பனை பொருட்களின் ஏலவரவு | 46 | 3 | 3 |
| ஆகமொத்தம் | 82 | 4 | 3 |

கவனிப்பு. சபையார் கொடுத்த சாமான்களையெல்லாம்
பேர்பேராக எடுத்துரைக்க அதிக இடமும் நேரமும் பிடிக்கும்
என்பதைப்பற்றி விடப்பட்டிருக்கிறது.

இப்பண்டிகைக் கொண்டாட்டம் இப்படியாக முற்றுப்
பெற்றது.

கடந்த நவம்பர் மீ 28-ம் தேதி பிரசங்கிமார் சென்னை
புரசவாக்கத்திலுள்ள அடைக்கலநாதர் ஆலயத்தில் குருப்பட்டம்
பெற்றதற்கு விடிவெள்ளி ஆலயச்சபையாரும் அங்குபோய் இருந்
தபடியால், தாங்கள் நாட்டையருக்குச் செலுத்தவேண்டிய மரியா
தையைத் தாமதித்து வைத்திருந்து இச்சமயத்தில் செய்ய எண்
ணங்கொண்டிருந்து மூப்பமாரின் கேட்டுக் கொள்ளுதலின்பே
ரில், கனம். ஐயர்மாரும் சபையாரும் கோவிலுக்குள் வந்து அமர்ந்
தார்கள். மகா-ா-ா I. D. தங்கஸாமி பிள்ளை B. A. இங்கிலீஷில்
இனிதாய் இயற்றிய Welcome song ஒன்றைப் பாடகர் குழாம்
தீங்குரலாய்ப் பற்பல சப்தத்தில் பாடி முகிந்த பின்னர், ஷை
மகா-ா-ா I. D. தங்கஸாமி பிள்ளை B. A. சபையார் நாமத்தில்
கனம். முத்துசாமி ஐயரவர்கள் குருப்பட்டம் பெற்றுத் தங்கள்
நடுவில் தேவ ஊழியத்தை நடப்பிக்கப் போகிறதற்காக அவரை
இங்கிலீஷில் வாழ்த்த, மூப்பனர் மகா-ா-ா R. V. முத்திய பிள்ளை
அவருக்கு ஞாபகசின்னம் ஒன்று அளிக்க, மூப்பனர் மகா-ா-ா
A. துரைசாமி பிள்ளை கனம். ஐயர்மாருக்கும் அம்மாளுக்கும்
மாலை சூட்டினர். பிறகு கனம். நாட்டையரவர்கள் சபையார் தன்
னைப்பக்ஷமாய் ஏற்றுக்கொண்டு அளித்த ஞாபகசின்னத்திற்காக
நன்றி வந்தனத்தை மும்முறை கூறித் தாம் சபையில் நடப்பிக்க
வேண்டிய உத்திரவாதமான ஊழியத்தையும், அதற்குச்சபை எப்
படி உதவியாயிருக்க வேண்டுமென்றும் விளக்கினர். பிறகு கனம்.
வட்ட சீனியரவர்கள் முடிவுரையாகப் பேசி ஜெபித்து ஆசீர்வாதங்
கூறக் கூட்டம் முடிவுக்கு வந்தது.

இச்சபை தழைத்தோங்கித் தங்களையும் தங்கள் பொரு
ட்களையும் கிறிஸ்துவின் நாம மகிமைக்கென்றும் அவரது இரா
ஜ்யத்தின் விர்த்திக்கென்றுமே கையளித்துக் கடைசியில் கோ

துமை மணிகளாக விளங்கி மோக்ஷத்தில் சேர்க்கப்பட அமலன் அருள்புரிவாராக. ஆமேன்.

G. A. T.

---

## ஒரிகினெஸ்.

தானியேலின் தீர்க்கதரிசன புஸ்தகத்தின் 8-ம் அதிகாரத்தில் முன்னறிவித்திருக்கிற மகா அலெக்சாந்தர் என்ற கிரேக்கதேசத்து அரசன் கி. மு. 332-ம் ஹு பினீசியா தேசத்தின் தலைநகரமாகிய தீருபட்டணத்தைப் பிடித்த பிறகு தன் கப்பல் சேனையை எகிப்து தேசத்திலுள்ள நீல் நதியின்மேல் கட்டப்பட்டிருந்த மெம்பிஸ் நகரத்தில் தனக்குக் காத்திருக்கச்சொல்லித் தான் கரைமார்க்கமாய் அவ்விடம் சென்று அங்கிருந்து லீபியா வனாந்தரத்தைத் தன் சேனையோடு கடந்து வரவே, பெர்சியா முதலிய பெரிய இராச்சியங்களை அவன் ஜெயித்ததையறிந்த எகிப்திய அரசன் அவனோடு சமாதானம் பண்ணிக்கொண்டான். ஆதலால் அவன் திரும்பிவந்து மெம்பிஸ் நகரத்தில் கப்பலேறி நீல் நதியின் மறு கிளை வழியாக அதின் முகத்துவாரஞ்சென்று அதற்குச் சமீபத்தில் தன் கீர்த்திப்பிரஸ்தாபம் பிற்காலத்திலுள்ள சகலருக்குந் தெரியும்பொருட்டு கி. மு. 332-ம் ஹு ஒர் பட்டணத்தைக் கட்டுவித்து அதற்கு அலெக்சாந்தரியா எனப் பெயரிட்டான்.

திருச்சபை ரோம இராச்சியத்தில் பரம்பியபொழுது அது கிழக்குச்சபை, மேற்குச்சபை என இரு பிரிவாயிருந்தது. அக்கீழ்ச்சபையில் கல்விப்பொருளுக்கும் செல்வப்பொருளுக்கும் உறைவிடமாயிருந்தது இந்த நகரமே. அங்கே லியோனிதாஸ் என்றோர் பக்தன் வசித்தான். அவன் கிரேக்கன். அவன் மனைவி யூதஸ்திரியென நினைக்கிறார்கள். இவர்களுக்கு 7 பிள்ளைகளிருந்தார்கள். அவர்களில் ஒருவர் ஒரிகினெஸ் என்பவர். ஒரிகினெஸ் என்றால் ஹோரஸ் என்ற சூரிய பகவானால் பிறந்தவரென்றர்த்தம்.

நாம் இப்போது இந்தப் போதகபிதாவின் சரித்திரத்தில் முதலாவது பால்யபருவத்தையும், இரண்டாவது புருஷபருவத்தையும், மூன்றாவது அவர் காலத்துக்குப்பிறகு திருச்சபை ஏற்றுக்கொண்டதும் தள்ளினதுமான அவருடைய போதகங்களையும் பற்றிப் பார்ப்போம்.

### I. ஒரிகினேஸ் என்பவரின் பால்ய பருவம்.

இவர் ஏறக்குறைய 185-ம் ஹு அலெக்சந்திரியா ஊரில் பிறந்தார். இவரது பிதா இவருக்கு அக்காலத்தில் பிரசித்தி



பெற்றிருந்த கிரேக்க தத்துவ சாஸ்திரத்தை மாத்திரமல்ல, தன் புதல்வன் தேவதாபத்தியில் சிறந்து விளங்கச் சத்தியவேதத்தை விசேஷமாய்ப்படிப்பித்தார். இவர் சிறுபையனாயிருக்கும்போதே வேதத்தை ஆராய்ந்துபார்க்கப் புகுந்து தன் தகப்பனாரைப் பல கஷ்டமான கேள்விகளைக் கேட்பாராம். அப்போது இவரது பிதா இவரைக் கோபித்து வேதத்திலுள்ளவைகளை மாத்திரம் வாசித்து அதைத் தன் மனதில் வைத்துத் தியானித்துக்கொள்ளச் சொல்வாராம். ஆனால் அவர் தன் இருதயத்தில் தனக்கு இப்பேர்ப்பட்ட குமாரனைத் தந்த தேவனை ஸ்தோத்திரிப்பது வழக்கம். அவர் அடிக்கடி இந்தப் பிள்ளையாண்டான் அயர்ந்த நித்திரையிலிருக்கும்போது பரி. ஆவியானவர் தனக்கு அகமும் ஆலயமுமாகத் தெரிந்துகொண்ட அந்தப் பிள்ளையின் முகத்தை உள்ளக்கனிவோடும், பக்தி வினயத்தோடும் முத்தஞ்செய்து தன் படுக்கைக்குப்போவார்.

193-211-ம் ஹு அரசுபுரிந்த செப்திமியுசெவேரு என்னும் இராயன்காலத்தில் திருச்சபைக்கு ஒருபெரிய துன்பம் உண்டாயிற்று. அத்துன்பத்தில் இவரது தகப்பனார் லியோனிதாஸ் என்பவர் சிறைச்சாலையில் வைக்கப்பட்டார். அப்போது ஏறக்குறைய பதினேழு வயதாயிருந்த ஒரிகினெஸ்தானும் தன் தகப்பனோடு இரத்தசாக்ஷியாய் மரிக்கவேண்டுமென்றாவலாயிருந்தபடியால் அவருடைய தாய் அவருடைய வஸ்திரங்களை ஒளிக்கத் தேவையாயிற்று. ஆதலால் அவர் தன் பிதாவுக்கு ஒரு கடிதம் வரைந்து அதில் நீர் மனோதைரியமாயிருக்கவேண்டுமென்றும், கிஞ்சித்தேனும் எங்களை நினைத்துக் கிலேசப்படவும் அதினால் உமது மனதைத் திருப்பவும் வேண்டாமென்றும் கண்டிருந்தது. அவர் தகப்பனார் சிரச்சேதம் பண்ணப்பட்டதுமன்றி அவருடைய ஆஸ்திகளெல்லாம் பறிமுதலாய்ப் போனபடியால் அவர் தரித்திரத்தினால் வருந்த நேரிட்டது. ஆனால் திருவுளச் சகாயத்தால் அவ்வூரிலுள்ள ஒரு சீமாட்டி அவரைத் தன் வீட்டிலேற்றுக்கொண்டு அவரைத் தான் பெற்றபிள்ளையிலும் உற்றபிள்ளையாகப் பாவித்ததுமன்றி அவர் சகோதரர் அறுவரையும் தாயையும் போஷித்து வந்தாள்.

### II. அவரது புருஷ பருவம்.

அப்பட்டணத்தில் கல்வியில் சிறந்த கிரேக்க ஞானிகளில் அநேகர் கிறிஸ்துமார்க்கத்தைச் சேர விரும்பினதினால் அங்கே ஓர் சாஸ்திரப் பள்ளிக்கூடம் ஸ்தாபிக்கப்பட்டு பந்தேனுவினாலும் அவருக்குப்பிறகு கிளமென்ஸ் என்பவராலும் நடத்தப்பட்டது. மேற்சொல்லிய இரு ஆசான்களிடத்திலும் அப்பள்ளியில் இவரும் கல்விப்பயின்றவரே. ஏறக்குறைய 203-ம் ஹு

திருச்சபைக்குண்டான துன்பத்தினல் கிளமென்ஸ் அலெக்சந்
திரியாவை விட்டுப்போகும்படி நேரிட்டது. சிறுவயதிலும்
மஞே தைரியமுடையவராய் விளங்கின ஒரிகினெஸ் இச்சோத
னையின் காலத்தில் அச்சாஸ்திரப் பள்ளிக்கூடத்தின் வேலையை ஒப்
புக்கொள்ளப் பின்வாங்கினதில்லே. இவர் வாலிபராயிருந்தும்
இவரால் சபைக்குண்டாகும் நன்மையைக்கண்ட தெமித்திரியு
என்ற அலெக்சந்திரியா பட்டணத்துக் கண்காணி அவரை அவர்
வலிய எடுத்துக்கொண்ட வேலேயில் ஸ்திரப்படுத்தினுர். இவரி
டத்தில் உபதேசம் பெற்றவர்களில் ஒருவராகிய புளூற்றூர்க்
என்பவர் முந்தி இரத்தசாக்ஷியானுர். செரேனுஸ் அக்கினியால்
தகனிக்கப்பட்டார். எராக்ளிஸ் சிரச்சேதம் பண்ணப்பட்டார்.
எராயிஸ் என்ற ஓர் கன்னிகை உபதேசிக்கப்படுங்காலத்திலேயே
புறமதஸ்தரால் கொளுத்தப்பட்டு இவ்வாறு அக்கினிஸ்நான
மடைந்தாள். இவர்களேப்போன்ற அவர் சிஷர் காவலில் இருக்
கும்போது அவர்களேச் சந்தித்துத் தங்கள் நம்பிக்கையில் உறுதி
யாயிருக்கும்படிக்குப் புத்திசொல்வார். இவர் இப்படிச் செய்தும்
கொல்லப்படாதிருந்தது தேவ சித்தமே.

என்றுலும் அவரை ஒருவிசை பிடித்து அவருக்குப்
பூசாரி உடுப்பை உடுத்தி ரோமரின் ஆலயமொன்றிற்குக் கொண்
டுபோய் அங்கே கூடியிருந்த சனங்களுக்குக் குருத்தோலேகளேக்
கொடுக்கச் சொன்னுர்கள். அவர் அப்படியே அக்குருத்தோ
லேகளே வாங்கி, விக்கிரகத்தின் குருத்தோலேகளேயல்ல கிறிஸ்து
வின் குருத்தோலேகளே வாங்குங்கள் என்று சொல்லி அங்கே கூடி
யிருந்த ஜனங்களுக்குக் கொடுத்தாராம்.

அஞ்ஞானிகளும் கிறிஸ்தவர்களும் அவரது கல்விக்காக
அதிசயப்படவே, அவர் அப்பள்ளியில் படும் பிரயாசையினுல்
அவருக்கு வைரக்கல்லானவரென்றும் இருப்புக்குடல் உடைய
வரென்றும் பெயரிட்டார்கள். இவர் தம்மிலுள்ள நம்பிக்கை
யைக் குறித்துக் கேட்போருக்குத் தகுந்த உத்தரவு சொல்ல
வல்லவராகும்படிக்கு மெய்ப்போதகத்தை மாத்திரமல்ல கள்ளப்
போதகரின் புஸ்தகங்களேயும் வாசித்தார். அன்றியும் புது பிளா
ற்றேனிக்கருக்குப் பிதாவாகிய அம்மோனியஸ்சக்கஸ் என்பவனு
டைய உபந்நியாசங்களேக் கேட்க அவன் பாடசாலேக்குப் போ
ஞர். இவ்வளவு படித்த இவருடைய கீர்த்தி எங்கும் பரம்பிற்று.

அரேபியாவிலுள்ள ஒரு சேனுதிபதி கிறிஸ்து மார்க்கத்
தைப்பற்றி அறிய ஆவல் கொண்டவனுய் ஒரு சேவகனே அலெக்
சந்திரியா பட்டணத்துக் கண்காணிக்கும் எகிப்து தேசத்தின்
பிரதிதுரைக்கும் நிருபங்களோடு அனுப்பி, அவர்கள் ஒரிகனெஸ்
என்பவரைத் தன்னிடம் அனுப்பக் கேட்டான். அப்படியே
ஒரிகனெஸ் ஞானபசிதாகமுடைய அந்த ஆத்துமாவின் சந்தே



கங்களே நிவர்த்தித்து மெய்யறிவைப் புகட்ட அவ்விடஞ் சென்
ருர். 222 - 235 - ம் ஞு அரசுபுரிந்த அலெக்சந்தர் செவேரு
என்பவருடைய தாயாகிய யூலியாமம்மேயா என்பவள் அந்தியோ
கியா பட்டணத்திலிருக்கும்போது அவரை வரவழைத்தாள்.
அவர் அதற்கிணங்கி அவளிடங் கொஞ்சக் காலமிருந்து அவளுக்
கும் மற்றவர்களுக்கும் கர்த்தருடைய வசனத்தை உபதேசித்
தார். அவர் அலெக்சந்திரியாவுக்குத், திரும்பி, கினஸ்திக்கரு
டைய போதகத்தால் மோசம்போன அம்புரோஸ் என்ற ஒரு
சபையானேத் திருப்பினர்.

பொருந்தாத நீரும் நெய்யும்போன்ற உலக ஞானத்தை
யும் உன்னத ஞானத்தையும் ஒன்றுக்கப்பார்த்த அந்த கினஸ்
திக்கருடைய போதகம் யாதெனில்:- (1) இந்து சாஸ்திரிகள்
பலர் சொல்வதுபோல் பராபர வஸ்துவும் மாய்கையும் அனுதி
யாய் உள்ளதென்றும், (2) அப்பராபர வஸ்துவுக்குள்ள தத்து
வத்தின்படி அதினின்று சோடிசோடியாக 15 சோடி பிராணி
கள் ஒன்றின்பின் ஒன்றுய்ப் புறப்பட்டதென்றும், (3) அப்பரா
பர வஸ்துவும் அதினின்று தோன்றின பிராணிகளுமிருக்கிற பர
லோகத்துக்குப் பரிபூரணம் என அர்த்தப்படும் பிளேரோமா
வெனும் பெயரிருக்கிறதென்றும், (4) அப்பிராணிகளில் கடை
சிப் பிராணியாகிய ஞானம் எல்லா மேலான தத்துவங்களும்
தோன்றின மூல காரணமாகிய பராபர வஸ்துவைத் தழுவ
வேண்டுமென்று ஆசித்ததால் தன் புருஷனுகிய டெமியூர்கஸ்
என்பவனே விட்டுவிட்டதென்றும், (5) அக்காரியத்தை மற்றப்
பிராணிகள் தடுத்ததினல் ஒரு கலகம் பிளேரோமாவில் உண்டா
கிக் கடைசியில் தோன்றினதினல் பெலவீனமான அந்த ஞானம்
மாய்கையில் விழுந்தது என்றும், (6) அப்படி உண்டான கலப்
பான பதார்த்தத்தைக்கொண்டு தாழ்ந்த தத்துவமாகிய டெமியூர்
கஸ் உலகத்தை உண்டாக்கினுனென்றும், (7) அந்த டெமியூர்கஸ்
பழைய ஏற்பாட்டின் தேவனென்றும், (8) அப்படி மாய்கையில்
விழுந்துபோன ஞானம் என்ற ஆவியைமீட்க எல்லாரிலும் மேன்
மையுள்ள ஒரு தத்துவம் புறப்பட்டதாகவும், அத்தத்துவம் பரம
கிறிஸ்துவென்றும், (9) டெமியூர்கஸ் என்ற சிருஷ்டிகன்தான்
யூதரைத் தெரிந்துகொண்டு அவர்களுக்கு இயேசுவென்ற மேசி
யாவை அனுப்பினுனென்றும், அவர் யோர்தானில் ஞானஸ்நா
னம் பெறும்போது பரமகிறிஸ்து அவர்மேல் வந்து அவரோடு
ஐக்கியமானுரென்றும், (10) பரலோகத்திலிருந்து வந்த கிறிஸ்து
இரக்ஷிப்பின் வழியைத் தெரிவித்த பிற்பாடு தம்மோடு ஐக்கிய
மான இயேசு சிலுவையிலறையுண்டு சாகுமுன் அவரைவிட்டு
பிளேரோமா என்ற பரலோகத்திற்குத் திரும்பினுரென்றும்,
(11) பரிசுத்தமாக்குதலில் தேறின ஆத்துமா அவரைப்போல்

அங்கே போகுமென்றும், (12) மற்றவைகள் மறுசென்மங்கள் வழியாய்ப் பக்குவமாகவேண்டுமென்றும் போதித்தனர். G. D.

(இன்னும் வரும்.)

## வர்த்தமான சங்கிரகம்.

Madras. — திவான் பகதூர், N. சுப்பிரமணியம் அவர்கள் சென்னை கவர்னரது சட்ட சபையில் அங்கமாக கவர்னரவர்களால் நியமனம் பெற்றது இவ்விராஜதானியின் சுதேச கிறிஸ்தவர்களுக்கு மகிழ்ச்சியையுண்டாக்கும் ஓர் விசேஷித்த சம்பவமாம். இராச்சியத்துக்குக் கிடைத்த இராஜாங்க சிலாக்கியங்களில் கிறிஸ்தவர்களும் மறக்கப்படவில்லையென்பதற்கு நமது கவர்னரின் இச்செய்கை போதுமான சாட்சி.

Calcutta. — கடந்த மாதம் 8-ம் உ முதன் முறையாய்க் கூடின வைசிராயின் புதிய சட்ட நிரூபண சபையில் இந்திய தேசத்து பத்திரிகைகளையும் அச்சியந்திர சாலைகளையும் இராஜதுவேஷத்துக் கிடமில்லாமல் அடக்கியாளுவதற்கான ஓர் மசோதா (Bill) சட்டமாக்கப்பட்டது. இது, அடங்காமல் இராஜ துவேஷ வெறிகொண்டலைந்த பத்திரிகைகளையடக்குங் கடிவாளமாயிருக்கும். இதனால் தேசத்துக்கு நன்மை விளையுமென நம்புகிறோம்.

கடந்த பதினாலு மாதங்களாய்த் தேசப் பிரஷ்ட ஆக்கினை யடைந்திருந்த ஒன்பது பேருக்கும் கடந்த மாதம் 8-ம் உ இரவு விடுதலை யளிக்கப்பட்டிருப்பதாய்க் காருண்ணிய இராஜ பிரதிநிதியவர்கள் புதிய சட்டசபை கலையுந்தருணத்தில் தெரிவித்தது தேசமெங்கும் அபரிமிதமான சந்தோஷத்தை விளைவிக்க ஏதுவாயிருந்தது.

கடந்த ஜனுவரி மீ 24-ம் உ மாலை 5 மணிக்கு ஐகோர்ட்டு கலைந்து போலீஸ் டிப்டி சூப்பரின்டெண்டு ஷாம்ஸ் உல் அலாம் என்பவர் வெளியே வந்து கொண்டிருக்கையில், ஓர் பங்காளி வாலிபன் அவரைக் கைத்துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தினன். சுட்டவனைக் கோர்ட்டுச் சேவகன் ஒருவனும் சில போலீஸ் அதிகாரிகளும் பிடித்துக் கைது செய்தார்கள். பிடிக்க வந்தவர்களையும் அவ்வாலிபன் சுட்டாலும், அவர்களுக்கு ஒரு சேதமும் நேரிடவில்லை. இராஜாங்கத்தார் அக்குற்றவாளியை ஓடிப்பிடித்த சேவகனுக்கும் போலீஸ் அதிகாரிகளுக்கும் 1000 ரூபாய் வெகுமதி யளித்தார்கள். சூடுபட்டிறந்தவர் அலிப்பூர் வெடி குண்டு கேசை வெகு திறமையாய் நடத்தி இராஜாங்கத்தாரால் கடந்த நவம்பர் மீ 'கான்பகதூர்' பட்டம் பெற்ற அரிய வீரதீரனாம்.

## நிருப நேயர்க்கு அறிக்கை.

'பாண்டேர் பாய்த்தறி நெசவு சாலைப் பிரதிஷ்டை' அடுத்த இலக்கத்தில் வரும். 'குடியின் கேடும் மீளும் வகையும்' மறுத்துவிடப்பட்டது.

[ப—ர்.]

Printed at the Ev. Luth. Mission Publishing House, Tranquebar. 1910.



| | | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|
| 26 | செங்கற்பட்டு ... ... ... ... | ... | 6 | 6 | ... | 6 | 6 |
| 27 | சென்னபட்டணம் I. ... ... ... | 8 | 2 | 1 | 8 | 2 | 1 |
| | | 2291 | 5 | 2 | 2291 | 5 | 2 |
| | **B. செலவு.** | | | | | | |
| | கமிட்டியார் பிரயாணச் செலவு ... ... | 8 | ... | ... | | | |
| | தேவசகாயம் சுவிசேஷகருக்கு ஒரு கம்பளி | 3 | ... | ... | | | |
| | கனம் J. D. தாவீது நாட்டையருக்கு ஒரு பஜனைக் கொட்டகைக்காகக் கொடுத்தது | 10 | ... | ... | | | |
| | ஞானனந்தம் சுவிசேஷகருக்கு 1909-ம் வூ ஏப்பிரில் முதல் நவம்பர் வரையில் சம்பளம் | 64 | ... | ... | | | |
| | | 85 | ... | ... | | | |
| | **C. கணக்கு விபரச் சுருக்கம்.** | | | | | | |
| | மொத்த வரவு ... ... ... ... | 2291 | 5 | 2 | | | |
| | மொத்த செலவு ... ... ... ... | 85 | ... | ... | | | |
| | | 2206 | 5 | 2 | | | |
| | **D. தொகை பாதுகாக்கப்பட்டிருக்கும் விதம்.** | | | | | | |
| | சென்னை சர்க்கார் வட்டி பத்திரங்கள் ... | 1000 | ... | ... | | | |
| | சேவிங்ஸ் பாங்கில் இருப்பது. ... ... | 1194 | 12 | 11 | | | |
| | கையிருப்பு ... ... ... ... ... | 11 | 8 | 3 | | | |
| | ஆக மொத்தம். | 2206 | 5 | 2 | | | |

மதுரை
31—12—1909.

சுவி. பிர. சங்கத்திற்காக
Th. BLOMSTRAND.

## மரண அறிக்கை.

எனது அருமை மனைவி பரிபூரணம் பிச்சையம்மாள் இரண்டு வருஷகாலமாய் இருதய நோவால் வியாதிப்பட்டு, இன்று காலை 3 மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரையடைந்தார்கள். அவர்கள் சரீரம் இன்று மாலை 5-மணிக்கு சுவி: லுத்தரன் மிசியோன் உத்தான தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 53. சங். 90, 15.

**N. A. ஜான் பிள்ளை.**
*Pensioned, Catechist.*

புரசவாக்கம்,
21-1-1910.
No. 36. MURUGAPPA MUDALY ST.

